இதுவும்-குறத்திசொல்லுதல்.

### விருத்தம்.

பல்லியும்பலபலென்னப் பகருநதிரிகூடத்திற்
கல்விமான்சிவப்பின்மிக்கான் கழுத்தின்மேன்மருவுமுள்ளான்
நல்லமேற்குலத்தானிந்த நன்னகர்த்தலத்தானுகை
வல்லியேயுனக்குநல்ல மாப்பிள்ளைவருவானம்மே

இதுவும்-குறத்சொல்லுவது.
ஸ்ரீராகம்-அடதாளசாப்பு

### கண்ணிகள்.

௧, தரைமெழுகுகோலமிடுமுறைபெறவேகணபதிவையம்மே-குட
தாங்காமுப்பழம்படைப்பாய்தேங்காயுமுடைத்துவைப்பாயம்மே
௨, அறுகுபுனல்விளக்கிடுவாயடைக்காயவெள்ளிலைகொடுவாயம்மே
வணட-அப்பமவல்வர்க்கவகைவையொப்பெறிவையம்மே
௩, நிறைநாழியளந்துவைப்பாயிறையோனைக்கரங்குவிப்பாயம்மேகுறி
நிலைசந்தைத்தேர்ந்துகொள்வாய்குலதெய்வத்தைநேர்ந்துகொள்வா
யம்மே
௪, குறிசொல்லவாகுறிசொல்லவாயிறைநுதலே குறிசொல்லவாவம்
மேலுயர்-குறும்பலவர்திருவுளத்தாற்பெரும்பலனுங்குறிசொல்லவாவ
[ம்மே

குறத்திசொல்லுதல்-கட்டளைக்கலித்துறை

ஆனேறுசெல்வர்திரிகூடநாதரணிநகர்வாழ்
மானேவசந்தப்பசுங்கொடியேவந்தவேளைநன்றே
தானேயிருந்ததலமுநன்றேசெழுந்தாமரைப்போற்
கானேறுகைம்மலர்காட்டாய்மனக்குறிநாட்டுதற்கே

இ-ம்-கல்யாணி-சாப்புதாளம்-கண்ணிகள்

௧, முத்திரைமோதிரமிட்டகையைக்காட்டா-யம்மே
முன்கைமுதாரியிட்டகையைக்காட்டாய்
௨, அஸ்தகடகம்புனைந்தகையைக்காட்டாய்-பொன்னி
லலங்காரநெளியிட்டகையைக்காட்டாய்
௩, சித்திரச்சூடகமிட்டகையைக்காட்டா-பசுஞ்
செங்கமலச்சங்கரேகைகையைக்காட்டாய்
௪. சத்திபீடத்திறைவர்நன்னகர்க்குள்ளே-வந்த
சஞ்சீவியேயுனதுகையைக்காட்டாய்

கொச்சகக்கலிப்பா,

ஏழைபங்கர்செங்கைமழுவேற்றவர்குற்றாலர்வெற்பில்
வாழிகொண்டமோகவந்தவவ்லிகைப்பார்த்து
வீழிகொண்டுசெங்கனிவாய்மிக்ககுறவஞ்சிபழங்
கூழைபுண்டவாயாற்குறியைமீண்டுசொல்வாளே.

குறத்திசொல்லுதல்-இ-ம்-பைரவி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. மாறுமலிருநிலத்தி லறம்வளர்க்குங்கையே
மனையறத்தாலறம்பெருக்கித் திறம்வளர்க்குங்கையே
உ. வீறுகநவநிதியம் விளையுமிந்தக்கையே
மேன்மேலும்பாலமுத மிளையுமிந்தக்கையே
௩. ஆறுதசனங்கள்பசி யாற்றுமிந்தக்கையே
அணங்கனையார்வணங்கிநிதம் போற்றுமிந்தக்கையே
௪. பேறுகளன்னகரங் காக்குமிந்தக்கையே
பிறவாதநெறிதார்க்கே யேற்குமிந்தக்கையே

குறத்திதெய்வம்பரவல்.

விருத்தம்.

கைக்குறிபார்க்கிலிந்தக் கைப்பிடிப்பவர்தாமெட்டுத்
திக்குமேயுடையராவர் ஜெகமகராஜிநீயே
இக்குறிபொய்யாதென்றேயிறையவர்திரிகூடத்தில்
மெய்க்குறவஞ்சிதெய்வம் வியப்புறவணங்குவாளே

ஆசிரியப்பா.

குழல்மொழியுதித்தார்குறும்பலாவுடையார்
அழகுசந்நிதிவாழம்பலவிநாயகா
செந்தில்வாழ்முருகாசெங்கண்மால்மருகா
கந்தனேயிலஞ்சிக்கடவுளேசரணம்
புள்ளிமானின்றபூவையேகுறக்குல
வள்ளிநாயகியேவந்தெனக்குதவாய்
அப்பனேமேலைவாசலிலரசே
செப்பருமலைமேற்றெய்வகன்னியர்கள்
ஆரியங்காவரவருட்சொரிமுத்தே
நேரியகுளத்தூர்நின்றசேவகனே
கோலமாகாளிகுற்றாலநங்காய்
காலவைரவாகன்துடிகறுப்பா
முன்னடிமுருகாவன்னியராயா
மன்னியபுலிபோல்வரும்பன்றிமாடா
எக்காலதேவிதுர்க்கைபிடாரி
யிக்கதோர்குறியாய்வேண்டுனனுங்களை
வந்துமுன்னிருந்துவசந்தமோகினிப்பெண்
சிந்தையில்நினைத்ததுசிவனோபொன்னோ
சலவையோபட்டோதவசதானியமா

கலவையோபுழுகோகளபகஸ்தூரியோ
வட்டிலோசெம்போவயிரமோமுத்தோ
கட்டிலோமெத்தையோகட்டிவிராகனோ
வைரப்பொடுசெப்போவாத்தொடுசெலவோ
கைப்படுதிரவியங்களுபோனதுவோ
மறுவிலாப்பெண்மயல்வருந்திருஷ்டிதோஷமோ
திரிகண்ணாரானவர்செய்தகைமயக்கமோ
மன்னர்தாமிவள்மேல்மயல்சொல்லிவிட்டதோ
கன்னிதானொருவர்மேற்காமித்தகுறியோ
சேலையும்வளையுஞ்சிந்தினதியக்கமோ
மாலையுமணமும்வரப்பெருங்குறியோ
இத்தனைகுறிகளிலிவள்குறியிதுவெனா
வைத்தோர்குறியைவருத்தருள்வீரே.

குறத்திசொல்-விருத்தம்.

கடித்திடுமரவம்பூண்டகருத்தர்குற்றாலர்நேயம்
பிடிக்குதுகருத்துநன்றாய்ப்பேசுதுசக்கதேவி
துடிக்குமிதன்னுதடுநாவுஞ்சொல்லுசொல்லென்றுவாயில்
இடிக்குதுகுறளியம்மேயினிக்குறிசொல்லக்கேளே.

குறத்திசொல்லுதல்-இ-ம்-பிலஹரி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க, சொல்லக்கேளாய்குறிசொல்லக்கேளாய்-யம்மே
தோகையர்க்கரசேகுறிசொல்லக்கேளாய்
உ, முல்லைப்பூங்குழலாளேநன்னகரில்வாழ்-முத்து
மோகனப்பசுங்கிளியேசொல்லக்கேளாய்
ங; பல்லக்கேறுந்தெருவிளானைநடத்தி-மணிப்
பணியாபரணம்பூண்டபார்த்திபன்வந்தான்
ச, செல்வப்பூங்கோலத்தையேநீகந்தடிக்கையி-லவன்
சேனைகண்டவெருட்சிபோல்காணுதேயம்மே

வசந்தவல்லிசொல்லுதல்-இ-ம்-பந்துவராளி-தாளம்-திரிபுடை.

கண்ணிகள்.

க. கன்னுநன்றுகுறவஞ்சிநாடகக்காரி-இந்த
நாட்டானபேர்க்கானவார்த்தைநானறியேனே
உ, ஒன்றுகோடாதேகுறிசொல்லியேவந்தாய்-பின்னை
புழப்பிப்போட்டாய்குறியுங்குழப்புப்போட்டாய்
ங, மன்றில்வருஞ்சேனைதன்னைக்கண்டுபயந்தால்-இந்த
மையலுந்திருதிருப்புர்தையலார்க்குண்டோ

௪. இன்றவனையேகுளிருங்காய்ச்சலுமுண்டோ-பின்னை
யொருதவகையென்றகுறிகண்டுசொல்லடி

குறத்திசொல்லுதல்

கண்ணிகள்.

௧. வாகனத்திலேறிவரும்யோகபுருஷன்-அவன்
வங்காரப்பவனியாசைபெண்களுக்குள்ளே

௨. நோகைநீயவனைக்கண்டுமோகித்தாயம்மே-அது
சொல்லப்பயந்தேயிருந்தேன்சொல்லுவேன்முன்னே

௩. காகமெனுகாததிரிகூடமலைக்கே-உன்மேல்
காய்ச்சலல்லகாய்ச்சலல்லகாமக்காய்ச்சல்காண்

௪. யோகினியேயுன்னுடற்கிறுகிறுப்பெல்லாம்
மோககிறுகிறுப்படிமோகனக்கள்ளி

வசந்தவல்லிசொல்லுதல்

கண்ணிகள்.

௧. கன்னியென்றுநானிருக்கஃன்னகர்க்குள்ளே
காமியென்றாய்குறவஞ்சிவாய்மதியாமல்

௨. சன்னையாகச்சொன்னேன்குறிசாதிப்பையானால்-அவன்
தாருஞ்சொல்லிப்பேருஞ்சொலலியூருஞ்சொல்லடி

குறத்திசொல்லுதல்.

கண்ணிகள்.

௧. உன்னைப்போலெனக்கவனறிமுகமோ-அவன்
ஊரும்பேருஞ்சொல்வதுங்குறிமுகமோ

௨. பின்னையுந்தானுனக்காகச்சொல்லுவேனம்மே
பெண்சேரவல்லவன்காண்பெண்கட்கரசே

வசந்தவல்லி சொல்லுதல்.

கண்ணிகள்.

௧. வண்மையோவாய்மதமோவித்தைமதமோ-என்முன்
மதியாமல்பெண்சேரவல்லவனென்றாய்

௨. கண்மயக்காமல்மயக்காதேயுண்மைசொல்லடி
கானமலைக்குறவஞ்சிக்கன்னிமயிலே

குறத்திசொல்லுதல்

கண்ணிகள்.

௧. பெண்ணரசேபெண்ணென்றால்திரியுமொக்கு-மொரு
பெண்ணுடனேசேரவென்றால்கூடவுமொக்கும்

௨. நின்னைமாகவல்லவனும்நாதனுமொக்கும்-பேரைத்
திரிகூடநாதரென்றேசெப்பலாமம்மே

கலிக்கூற்று.

மன்னர்திரிகூடநாதரென்னும்போதிலே-முகம்
மாணிக்கவசந்தவல்லிநாணிக்கவிழ்ந்தாள்

குறத்திசொல்லுதல்

கண்ணிகள்.

௧. நன்னகரிலீசருன்னைமேவவேவாரார்-இந்த
நாணமெல்லாம்நாளைநானும்காணவேபோறேன்
௨. கைநொடியிற்பொன்னிதழிமாலைவருங்கா-ணிவ்வி
கக்கத்திலிடுக்குவாயுன்வெட்கத்தையம்மே
௩. என்றுமொருகுறவஞ்சிதன்னையழைத்தே-அரு
ளிட்டுசருவாபரணம்பூட்டினளே

சிங்கன்வருதல்-விருத்தம்.

பாமாலைத்திரிகூடப்பரமரருள்பெறவசந்தப்பாவைகூந்தம்
பூமாலையிதழிபெறப்பொன்மாலை மணிமாலைபொலிவாய்ப்பூண்டு
நாமாலைக்குறவஞ்சிநன்னகர்பட்டணமுழுதும்நடக்குநாளில்
மாமாலைபூண்டசிங்கன்வங்கணச் சிங்கியைத்தேடிவருகின்றானே

இதுவுமது-விருத்தம்.

வக்காவின்மணிபூண்டுகொக்கிறகுசிகைமுடித்துவரித்தோற்கச்சை
தொக்காகவரிந்திறுக்கித்தொடர்புலியைக்கண்டுறுக்கித்தூணிதூக்கிக்
கைக்காலவாயுதங்கள்கொண்டுசில்லிக் கோலெடுத்துக்கண்ணிசேர்த்
துத், திக்கடங்காக்குளுவசிங்கன்குற்றாலத்திரிகூடச்சிங்கன்வந்தான்.

இதுவுமது-விருத்தம்.

வக்காவின்மணிசூடிவகைக்காரிசிங்கிவரும்வழியைத்தேடி
மிக்கானபுலிகரடிகிடுகிடெனநடுநடுங்கவெறித்துநோக்கிக்
கக்காவென்றோலமிடுங்குருவிகொக்குக் கேற்றகண்ணிகையில்வாங்கி
தொக்காகநடைநடந்துதிரிகூடமலைக்குறவன்தோன்றினானே

இராகம்-அடாணா-சாப்புதாளம்-கண்ணிகள்.

கொக்கிறகுசூடிக்கொண்டுகுருவிவேட்டையாடிக்கொண்டு
க்காவின்மணிபூட்டிக்கொண்டுமடவார்கண்போலிட்டிக்கொண்டு

தொக்காய்கச்சையிறுக்கிக்கொண்டுதுள்ளுமீசைமுறுக்கிக்கொண்டு-
நுக்கடங்காக்குளுவசிங்கன்திரிகூடச்சிங்கன்வந்தான்

சிங்கன்சொல்லுதல்-

விருத்தம்.

ஆளிபோற்பறந்தகுரும்பிசைகேட்குந்திரிகூடந்தமலர்காட்டில்
மேவளைதொறும்புகுந்துதிருவிளையாட்டாங் கண்ணிகுந்திவேட்டையாடி, ஞாளிபோறகுவடெடுத்துப்பூனைபோலொளிபோட்டுநரிபோற்பம்மிக,கூளிபோற்றொடர்ந்தடிக்குந்திரிகூடப்பெரியசிங்கக்குளுவன்னே

இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்-கண்ணிகள்.

௧, தேருக்கரியார்மூவரிற்பெரியார்சித்திரச்சபையார்சித்திரநதிசூழ் கோவிலிற்புறவில்காவலிலடங்காக்குருவிகள்படுக்குங்குளுவனு நானே.

௨. காதலஞ்செழுத்தாற்போதநீறணியார்கைந்நரம்பெடுத்துக்கின்னரந்தொடுத்துப்பாதகர்தோலால் பலதவிலடித்தும்-பறவைகள்படுக்குங்குறவனும்நானே.

௩. தலைதனிற்பிறையார்பலவினிலுறைவார் தாளிணைவணங்கார்சிகைதனைப்பிடித்தே-பலமயிர்நறுக்கிச் சிலகண்ணியிறுக்கிப்-பறவைகள்படுக்குங்குளுவனும்நானே.

௪, ஒருகுழைச்சங்கம்ஒருகுழைத்தங்கம்.உரியவினோதர்திரிகூடநாதர் திருநாமம்போற்றிதிருநீறுசாத்திதிரிகூடநாமச்சிங்கனும்நானே.

நூவன்வருதல்-

விருத்தம்.

புலியொடுபுலியைத்தாக்கிப் போர்மதயானைசாய்க்கும்
வலியவர்திரிகூடத்தில் மதப்புலிசிங்கன்முன்னே
கலிகளுங்கதையும்பேசிக் கையிலேயீட்டிவாங்கி
எலிகளைத்துரத்தும்வீரனீப்புலிநூவன்வந்தான்

இராகம்-அடாணா-சாப்புதாளம்
கண்ணிகள்.

௧. ஊர்க்குருவிக்குக் கண்ணியுங்கொண்டு உள்ளான்படுத்தது மெண்ணிக்கொண்டு-மார்க்கமெல்லாம்பலபேசிக்கொண்டுகோட்கார நூவனும்வந்தான்

௨, கரிக்குருவிக்குக்கண்ணியுங்கொண்டுகானங்கோழிக்குப்பொரியுங்கொண்டு-வரிசிலைக்குளுவரிற்கவுண்டன் . வாய்ப்பான நூவனும்வந்தானே.

௩. ஏகனைநாகனைக்கத்திக்கொண்டுஎலியானைபுலியானையேவிக்கொண்டு வாகைசிங்கனைமேவிக்கொண்டுவங்கார நூவனும்வந்தானே.

௪. கொட்டகைத்தூண்போலக்காலிலங்கவொட்டகம்போலமேலிலங்க
கட்டாணிதிரிகூடச்சிங்கன்மட்டிவாயனும்நானே.

சிங்கன்பட்சிகளைப்பார்த்தல்-

விருத்தம்.

மூவகைமதிலுஞ்சாய மூரலால்வீரஞ்செய்த
சேவகர்திருக்குற்றாலர் திருவிளையாட்டந்தன்னில்
பாவகமாகநாவல் பறவைபோற்பறவைகூவி
மாவின்மேற்சிங்கன் வரும்பட்சிபாக்கின்றானே

தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்

பல்லவி.

வருகினுமையே-பறவைகள்-வருகினுமையே

அநுபல்லவி.

வருகினுமையேதிரிகூடநாயகர்
வாட்டமில்லாப்பண்ணைப்பாட்டப்புறவெல்லாம்
குருகுநாரையுமன்னமுந்தாராவும்
கூழைக்கிடாக்களுஞ்செங்கால்நாரையும் (வருகினு)

சரணங்கள்.

௧. சென்னியிலேபுனற்கன்னியைவைத்த
திரிகூடநாதர்திரிமாதுவேட்கையில்
மன்னனொருவன்வரிசையிட்டான்கங்கை
மங்கைக்குநானும்வரிசைசெய்வேனென
அன்னதுபவுடையாகாசகங்கை
யடுக்களைக்காணப்புறப்படுநேத்திபோல்
பொன்னிறவாளெங்குந்தன்னிறமாகப்
புரிந்துபுவனந்திரிந்துகுருகினம் (வருகினு)

௨. காடைவருகுதுகம்புள்வருகுது
காக்கைவருகுதுகொண்டலாத்தியும்
மாடப்புறாவுமயிலும்வருகுது
மற்றொருசாரியாய்க்கொக்குத்திரளெல்லாம்
கூடலேபுள்ளாக்கிச்சைவம்புறம்பாக்கி
கூடுஞ்சமணரைநீடுங்கழுவேற்ற
ஏடெதிரேற்றியசம்பந்தமூர்த்திகள்
நிட்டதிருமுத்தின்பந்தல்வந்தாற்போலே. (வருகினு)

௩; வெள்ளைப்புறாவுஞ்சகோரமுமாந்தையும்
மீன்கொத்திப்புள்ளுமரங்கொத்திப்பட்சியும்
கிள்ளையும்பஞ்சவர்ணக்கிளிகூட்டமுஞ்
சேகப்பட்சியும்நாகணவாய்ச்சியும்

உள்ளாறுஞ்சிட்டுவலியாறுமன்றிலும்
ஓலஞ்செய்தேகூடிநாலேஞ்சூதோற்றமாய்
ஆள்ளாடுஞ்சூலகபாலர்பிராட்டியார்
தொட்டாடுமைவர்னப்பட்டாடைபோலவே. (வருநிறு)

சிங்கன்சொல்.

கொச்சகக்கலிப்பா.

ஈராயிரங்கரத்தானேற்றசங்குநான்மறையும்
சீராயிரங்கடஞ்செய்தவாகுற்றாலவெற்பில்
பாராய்பலமுகமும்பட்சிநிரைசாயுதையே
ஓராயிரமுகமும்பட்சிநிறைசாயுதையே.

தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சாயினுமையே-பறவைகள்- சாயினுமையே.

அனுபல்லவி.

சாயினுமையேபாயும்பறவைகள்
சந்தன்க்காட்டுக்குஞ்சண்பகக்காவுக்கும்
கோயிற்குழல்வாய்மொழிமங்கைப்பெருகுங்
குற்றாலநாயகர்சிற்றாற்றுவெள்ளம்போல் (சாயி)

சரணங்கள்.

காராறுஞ்செங்குள்மேலப்பாட்டுபெற்றுக்
காடுவெட்டிப்பற்றுநீடுசுண்டைப்பற்று
சீராரும்பேட்டைக்குளப்போடைக்காங்கேயன்
ஸ்ரீகிருஷ்ணன்மேடுமுனிக்குருகன்பேரி
ஏரிவாய்சிவலப்பேரிவடகா
லிராசகுலராமன்கண்டுகொண்டான்மேலே
மாரிப்பற்றுங்கீழைமாரிப்பற்றுஞ்சன
நேரிப்பற்றுஞ்சாத்தனேரிப்பற்றுஞ்சுற்றி (சாயினு)

பாறைக்குளந்தெற்குமேல்வழுதிக்குளம்
பாட்டைப்பெருங்குளஞ்செங்குறிஞ்சிக்குளம்
ஊருணிப்பற்றுந்திருப்பணிநீள
முயர்ந்தபுளியங்குளந்துவரைக்குளம்
மாறனேரிக்குளமளத்தளம்பாறை
வழிமறித்தான்குளமாலடிபற்றும்
ஆரணிகுற்றாலர்தோட்டச்செய்
அபிஷேகப்பேரிக்கணக்கன்பற்றிலுஞ் (சாயினு)

ஐயர்குற்றாலத்துநம்பியார்திருந்து
  மப்பாலொருதாதன்குற்றாலப்பேரி
செய்யும்புலியூரிலஞ்சிமேலகரந்
  செங்கோட்டைவிலைகல்லூர்சிற்றம்பலம்
துய்யகுன்றக்குடி வாழவல்லான்குடி
  சுரண்டையூர்முதலுட்பிடைசுற்றியே
கொய்யமலர்த்தாரிலஞ்சிக்குமர
  குருவிளையாடுந்திருவிளையாட்டத்தில் (சாமினு)

சிங்கன்சொல்.

கொச்சகக்கலிப்பா.

கொட்டழகுகூத்துடையார்குற்றாலநாதர்வெற்பில்
நெட்டழகுவாள்விழியும்நெற்றியின்மேற்கஸ்தூரிப்
பொட்டழகுங்கரத்தழகும்பொன்னழகுமாய்நடந்த
கட்டழகிதன்னழகென்கண்ணளவுங்கொள்ளாதே.

தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

மேயினுமையே-பறவைகள்-மேயினுமையே.

அநுபல்லவி.

மேயினுமையேகுற்றாலநாதர்வியன்குலசேகரப்படிக்குளங்களும்
ஆயிரப்பேரியுந்தென்காசியுஞ்சுற்றி யயினையுந்தேளியுமாராலுங்
கொத்தியே. (மேயினு)

சரணங்கள்.

ஆலயஞ்சூழத்திருப்பணியுங்கட்டி யன்னசத்ரங்கட்டி யப்பாலுந்தெ
ன்காசிப், பாலமுகங்கட்டிப்படித்தரஞ்சேர்க்கட்டி பத்தசனங்களைக்
காக்கத்துசங்கட்டி, மாலயன்போற்றிய குற்றாலநாதர்க்குவழித்தொ
ண்டுசெய்திடக்கச்சைகட்டிக்கொண்ட. சிலன்கிளுவையில்சின்னஞ்சே
ந்திரன் சிறுகாலசந்திதிருத்துப்புறவெல்லாம். (மேயினு)

௨-தானைத்தலைவன்வயித்தியப்பன்பெற்ற சைவக்கொழுந்துதருமத்
துக்காலயஞ் சேனைச்சலரிப்பெருமாள்சகோதரன்செல்வன் மருதூர்
வயித்தியப்பனுடன் மானவன்குற்றாலநாதனைப்பெற்றவன் வள்ளலெ
னும்பிச்சைப்பிள்ளைத்திருத்தெல்லாங் கானக்குளத்துள்வாய்கிழைப்
புதுக்குளங் கற்பூரக்காற்பற்றுந்தாட்டான்குளஞ்சுற்றும், (மேயினு)

௩-மன்னன்கிளுவையிற்சின்னணஞ்சேந்திரன் வடகரைவீட்டுக்குமந்தி
ரியாகவும் செந்நெல்மருதூர்க்குநாயகமாகவுந் தென்காசியூருக்குத்
தாயகமாகவும் தன்னைவளர்க்கின்றகுற்றாலநாதர் தலத்தைவளர்க்கி
ன்றதானிகனாகவும் நன்னகர்குற்றாலத்தந்தாதிசொன்னவன் நண்ணா
ர்தொழும்பிச்சைப்பிள்ளைத்திருத்தெல்லாம் (மேயினு)

௪-நன்னகரூர்கட்டிச்சாலைமடங்கட்டி நாயகர்கோவிற்கொலுமண்டப
ங்கட்டி தென்னமரம்பரமானந்தத்தோப்பிட்டுத் தெப்பர்குளங்கட்டி

த்தேர்மண்டபங்கட்டிப் பன்னுந்திரிகூடத்தம்பங்கட்டிப் பசுப்பி ளைகோடித்திருப்பணியுங்கட்டி யந்நாளில்தர்மக்களஞ்சியங்கட்டு ம னந்தபத்மநாபன்கட்டளைப்பற்றெல்லாம் (மேயினு)

௫-தந்தைமுன்கட்டினவம்பலத்துக்குந் தன்மத்துக்கும்நிலைக்கண்ணு டிபோலவே எந்தையார்வாசலிற்பிள்ளையார்செய்வித் திரண்டுகுறிஞ் சிப்படித்துறையுஞ்செய்த கொந்தார்புயத்தானிராக்கதப்பெருமாள் குற்றாலநாதன் முன்னுற்றகோசரன் வந்தனைசேர்சங்கு முத்துதன் மைத்துனன்மன்னன்வயித்தியநாதன்திருத்தெல்லாம். (மேயினு)

௬-ஆர்மேல்வருகின்றதுன்பமுநீக்கியடங் கார்குறும்படக்கியேதென் காசியூர்மேலுயர்ந்தமனுநீதிநாட்டியுடையவர் குற்றாலர்பூசைநைவே த்தியமதோமேற்றிருநாளுந்தெப்பத்திருநாளும் சித்திரமண்டபஞ்ச த்திரச்சாலையும் பார்மேல்வளஞ்செய்யனந்தபத்மநாபன்பாலன்வயித் தியநாதன்திருத்தெல்லாம். (மேயினு)

௭-ஆறையழகப்பபூபாலன்கட்டளையன்பன் திருமலைக்கொழுந்துத ன்கட்டளை நாறம்புகுற்றாலச்சங்குகன்கட்டளை நங்களெல்லாரரிநரபா லன்கட்டளை வீறுசேர்பால்வண்ணச்சங்குதன்கட்டளைமிக்கானவோ மனூர்கிருஷ்ணன்வணிசேசன் பேருடையன்பன் வருசங்குமுத்துத ன்பேரானகட்டளைச்சிரானபற்றெலாம் (மேயினு)

௮-தாணிகன்சர்க்கரைப்பண்டாரமென்னுந்தணியாதகாதறபணிவிடை செய்கின்ற மேன்மைபெருஞ்சுந்தரத்தோழன்கட்டளைமிக்ககருவைப் பதிராம்நாயகன் நானிலமும்புகழ்தாகந்தீர்த் தானுடன்வல்லூர்வரு ஞ்சங்கரமூர்த்திகட்டளை ஆனசடைத்தம்பிரான்பிச்சை கட்டளையப் யால்மலைநாட்டார்கட்டளைப்பற்றெல்லாம் (மேயினு)

சிங்கன்சொல்-கொச்சகக்கலிப்பா.

செட்டிக்கிரங்கிவினைதீர்த்தவர்குற்றாலர்வெற்பில்
சுட்டிக்கிணங்குநுதற்சுந்தரிபாள்கொங்கையின்மேல்
முட்டிக்கிடந்துகொஞ்சிமுத்தாடிக்கூடிநன்றாய்க்
கட்டிக்கிடக்குமுலைக்கச்சாய்க்கிடந்திலனே.

தரு-இ-ம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

பல்லவி.

கண்ணிகொண்டுவாடா குளுவா கண்ணிகொண்டுவாடா.

அனுபல்லவி.

கண்ணிகொண்டுவாடாபண்ணவர்குற்றாலர்
காரார்திரிகூடச்சாரலிலேவந்து
பண்ணியபுண்ணியமேறினாற்போலே
பறவைகளெல்லாம்பறந்தேறிமேயுது (கண்ணி)

சரணங்கள்.

மானவர்சூழுமதுரையிற்பாண்டியன்
மந்திரியார்கையின்முந்திப்பணம்போட்டுத்

தானுசைப்பட்டுமுன்கொண்டகொக்கெல்லாந்
தாங்கொண்டதில்லைநரிகொண்டுபோச்சுது
கானவர்வேடந்தையினமென்றெண்ணாதே
காக்கைப்படுந்தகருமுகில்வண்ணனும்
மேனாட்படுத்திட்டகொக்கிதின்றும்
விடைமேலிருப்பார்சடைமேலிருக்குது (கண்ணி)

முன்னாள்படுத்தபழம்பெருச்சாளியை
மூத்தநயினார்மொடுவாய்க்கொடுபோனார்
பின்னானதம்பியாராணுமயிலையும்
பிள்ளைக்குறும்பாற்பிடித்துக்கொண்டேகினார்
பன்னாருமன்னத்தைநன்னகரீசர்
பரிகலமீந்திடும்பார்ப்பானுக்கீந்தனர்
வன்னப்பருந்தொருகள்வன்கொடுபோனான்
வக்காவுநாரையுங்கொக்கும்படுக்கவே (கண்ணி)

மீறுமிலஞ்சிக்குறத்தியைக்கொண்டசெவ்
வேட்குறவன்முதல்வேட்டைக்குப்போனநாள்
ஆறுநாட்கூடியொருகொக்குபட்ட
தகப்பட்டகொக்கையவித்தொருசட்டியில்
சாறுகவைத்தபின்வேதபிருமணர்
தாமுங்கொண்டார்சைவர்தாமுங்கொண்டார்தவப்
பேருமுனிவருமோற்றுகொண்டாரினிப்
பிக்குச்சொல்லாமலேகொக்குப்படுக்கவே (கண்ணி)

கவிக்கூற்று-கொச்சகக்கலிப்பா.

ஆனைகுத்திச்சாய்த்ததிறலாளர்திருக்குற்றாலா
சனிகொத்திமுக்கிவிக்கிக்கொக்கிருக்கும்பண்ணையெல்லாம்
சேனைபெற்றவாட்காரச்சிங்கனுக்குக்கண்ணிகொண்டு
பூனைகுத்திநூவன்முழுப்பூனையைப்போல்வந்தானே.

நூவன்-சொல்லுதல்.

இராகம்-காம்போதி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

கலந்தகண்ணியைநெருக்கிக்குத்தினால்காக்காயும்படுமே குளுவா
கா காயும்படுமே
மலர்ந்தகண்ணியைக்கவிழ்த்துகுத்தினால்வக்காவும்படுமே குளுவா
வக்காவும்படுமே
உலர்ந்தகண்ணியையிறுக்கிக்குத்தினாலுள்ளானும்படுமே குளுவா
உள்ளானும்படுமே
குலந்தகண்ணியைத்திருத்திக்குத்தடாகுற்றாலமலைமேல் குளுவா
குற்றாலமலைமேல்

சிங்கன்சொல்-கொச்சகக்கலிப்பா.

கள்ளுலவுகொன்றையந்தார்கர்த்தர்திரிகூடவெற்பில்
பிள்ளைமதிவாணுதலாள்பேசாதவீறடங்கித்
துள்ளிமடிமேலிருந்துதோளின்மேலேறியவள்
கிள்ளிமொழிகேட்கவொருகிள்ளையானேனிலையே.

தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

கெம்பாறடையே-பொறுபொறு-கெம்பாறடையே.

அநுபல்லவி,

கொம்பாறடையெநம்பர்குற்றாலர்
கிருபைப்புறவில்பறவைபடுக்கவே
வம்பாகவந்தவுன்சத்தத்தைக்கேட்டல்லோ
வந்தகுருவிகலைந்தோடிப்போகுது (கெம்பா)

சரணங்கள்.

ஏறுகமீன்களுமேறிவருகுது
எத்திசைப்பட்டகுருகும்வருகுது
நூறுறுகண்ணியைப்பெருக்கக்குத்தியே
நூவனுநானுமிருந்தோமுனக்கினி
பேறுனகுளைமருந்தாகிலும்பிறர்
பேசாமல்வாடைப்பொடியாகிலுமனாக்
கூறுகிலுமொருபங்காகிலுமொரு
கொக்காகிலும்நரிக்கொம்பாகிலுந்தாறேன் (கெம்பா)

பூசியுடுத்துமுடித்துவளையிட்டுப்
பொட்டிட்டுமையிட்டுபொன்னிட்டுப்பூவிட்டுக
காசுபறித்திடும்வேசையராசாரக்
கண்ணிக்குள்ளேபடுங்காமுகர்போலவும்
ஆசாரவீனத்துலுக்கன்குதிரை
யடியொட்டிப்பாறையடியொட்டினாற்போலுங்
தேசத்துக்கொக்கெல்லாங்கண்ணிக்குள்ளேவந்து
சிக்குதுபார்கறிதக்குதுபாரினிக் (கெம்பா)

ஆலாவுங்கொக்குமருகேவருகுது
ஆசாரகள்ளர்போல்நாரைதிரிகுது
வேலானகன்னியராசையினாற்கீழு
மேலுந்திரிந்திடும்வேடிக்கைக்காரர்போல்
காலால்திரிந்துத்திரிந்துதிரிந்தெங்கள்
கண்ணிக்குள்ளாகும்பறவையைப்போகட்டும்
பாலாறுநெய்யாறுபாய்கின்றஓட்டத்திற்
பல்லொடிக்கச்சிறுகல்லகப்பட்டாற்போல் (கெம்பா)

கவிக்கூற்று.

ஆசிரியவிருத்தம்.

தேவிகுழல்வாய்மொழிப்பேர்நாச்சியார்கால் செண்பகக்கால்திருந்தமதிருகுடிஞர்கால், காவியல்வெண்மடைதட்டான்பற்றுச்சள்ளிக்குளமழகர்பள்ளன்கூற்று - வாலிதொருங்கின்றுசிங்கன்வேட்டையாடிவருளியாற்றுக்கால்வடகால்தென்கால் - கோளில்விளையாட்டமெங்குங்கண்ணிகுத்திக்கூவிநூலவனைவிட்டேவினனே.

சிங்கன்-சொல்லுதல்.

இ-ம்-தர்பார்-சாப்புதாளம்.

கண்ணிகள்.

கல்வித்தமிழ்க்குறியார்திரிகூடநாதர்கர்த்தர்பொற்ருள்பரவுஞ்
 செல்வக்கடலணயான்குற்ருலச்சிவராமநம்பியெங்கோன்
வல்லமணியபட்டன் பெருமைவளர் சங்குமுத்துநம்பி
 வெல்லுங்குற்ருலநம்பிபுரவெல்லாம் மின்கொத்திக்கூட்டமையே.
சீராளன்பிச்சபிள்ளை திருப்பணி செல்வப்புதுக்குளமும்
 காராளன்சங்குமுத்து திருத்தொடைக் காங்கேயன்கட்டளையும்
மாராஜன்தென்குடிகை வைத்தியநாதன்புதுக்குளமும்
 தாராளமானபுள்ளும் வெள்ளன்னமுந் தாராவுமேயுதையே
தானக்கணக்குடனேஸ்ரீபாண்டாரந்தன்மபத்தர்கணக்கும்
 வானவர்குற்ருலர் திருவாசம் மாடநற்பத்தியமும்
நானிகழ்சூழ்குடிகை வைத்திய நாதனரபாலன்
 தானபிமானம்வைத்த சிவமாரன் சம்பிரதிகணக்கும்
வேதநாராயணவேள் குமாரன் விசைத்தொண்டநாடாளன்
 சிதரன்முத்துமன்னன் விசாரிப்பச் சேர்ந்தபுரவினெல்லாம்
காதலாய்க்கண்ணிவைத்து பறவைக்குக் கங்கணங்கட்டிநின்றே
 னேதோவொருபறவை தொடர்ந்துவந் தென்னைக்கடிக்குதையே.

சிங்கன் சிங்கியை நினைத்துக்கொள்ளுதல் விருத்தம்.

காவலர்திரிகூடத்திற்காதலாற்கலங்கிவந்த
நாவனைப்பழித்துச்சிங்கனேச்சியேவேட்டைகாட்டி
லாவல்சேர்காமவேட்டையாசையாலன்னப்பேட்டைச்
சேவல்போய்புணரக்கண்டான்சிங்கிமேற்பிறமைகொண்டான்.

சிங்கியை-நினைத்துப்புலம்பல்.

இ-ம்-ஆசிரி-சாபுதாளம்.

எட்டுக்குரலிலொருகுரல்கூவும் புருவே யென
 தேகாந்தச்சிங்கியைக்கூவாததென்ன குலாவே
மட்டார்குழலிதன்சாயலைக்காட்டு மயூரமே யவள்
 மார்பிலெழுந்தமுலையையுங்காட்டுப காரமே

தட்டொத்தகும்பத்தடமுலைகாட்டுஞ் சகோரமே சற்றுந்
தண்ணென்றும்வேச்சென்றுங்காட்டிவிட்டாலுபகாரமே
கட்டி இரவியக்கண்போலுநன்னகர்க் காவியே கண்ணிற்
கண்டிடமெல்லாமவளாகத்தோற்றுது பாவியே

சிங்கன்சொல்-கொச்சகக்கலிப்பா.

செட்டிபத்திற்கண்ணிவைத்தேன்சிங்கிநடைச்சாயலினுற்
பெட்டைகுளத்திலன்னப்பேட்டைநடைபார்த்திருந்தேன்
கட்டுற்றநன்னகர்க்கென்கண்ணியெல்லாங்கொற்றிவெற்றிக்
கொட்டிக்கொண்டையேகுருவியெல்லாம்போயினுமே.

தரு-இம்-முகாரி-சாப்புதாளம்.

பல்லவி.

போயினுமையே பறவைகள் போயினுமையே.

அனுபல்லவி.

போயினுமையேநாயகர்குற்றாலர்
பொல்லாததக்கன்மதத்தையழித்தநாள்
வாயிவடிபட்டிடிபட்டுதைபட்டு
வானவர்தானவர்போனதுபோலவே (போயினு)

சரணங்கள்.

மேடையினின்றொருபஞ்சவர்னக்கிளி
மின்னார்கைதப்பியென்முன்னாகவந்தது
பேடையென்றேயதைச்சேவல்தொடர்ந்தது
பின்னொருசேவலுங்கூடத்தொடர்ந்தது
கூடியவின்பமிரண்டுக்குமெட்டாமற்
சுந்தோபசுந்தரர்வந்தகலாபத்திற்
காடெல்லாம்பட்சியாய்க்கூடியுளம்பாடிக்
கண்ணியுந்தட்டியென்கண்ணிலுங்கூட்டியே (போயி)

ஆயிரங்கொக்குக்கண்ணியைவைத்துநா
னப்பாலேபோயொருமிப்பாயிருக்கையில்
ஆயிரங்காகங்களாயிரம்பட்டு
மறைத்துவிளைத்துக்கிடப்பதுபோலவே
காயமொடுங்கிக்கிடந்ததுகண்டுநான்
கண்ணிகழற்றிநிலத்திலேவைத்தபின்
சேயிழைதனைபொருட்டாலேபஞ்சாட்சரஞ்
சேவித்தமன்னவன்பாவம்போனாற்போலே (போயி)

தம்பமென்றேநம்பினேனைச்சதிபண்ணித்
தான்வாழ்ப்பார்ப்பவர்செல்வங்கள்போலவும்
பம்பும்வடபாலருவியிற்றோய்ந்தவர்
பாவங்கழுநீராய்ப்போவதுபோலவும்

குரும்பாழணிக்குருச்சிவமானகாலங்
குதித்தோடிப்போனவைணவர்போலவும்
அம்பிகைபாகந்திரிகூடநாத
ரடியவர்மேல்வந்ததுன்பம்போனாற்போலே. (போயினு)

நூவன்-சிங்கனைப்பழித்தல்.

விருத்தம்.

வருக்கையார்திரிகூடத்தின்மாமிமேற்கையும்வேலிப்
பருத்திமேற்கண்ணுமானபாவைபோல்வேட்டைபோனாய்
கருத்தாவேருனாய்தாயைக்கற்பித்தமகள்போலென்னைச்
சிரித்தனைசிங்காவுன்னைச்சிரித்ததுகாமப்பேயே.

இதுவும்-நூவன்சொல்-விருத்தம்.

கடுக்கையார்திரிகூடத்திற்காமத்தால்வாமக்களைக்
குடித்தவர்போலேவிழ்ந்தாய்கொக்குநீபடுத்துவாழ்ந்தாய்
அடிக்கொருவினைவேன்சிங்காவாசைப்பேயுனைவிடாது
செடிக்கொருவலையும்போட்டுச்சிங்கியைத்தேடுவாயே.

சிங்கன்-நூவனுக்குச்சொல்லுதல்.

விருத்தம்.

வேடுவர்கள்ளியோர்நாண்மெய்யில்லாதவனேயென்னை
யூடலிற்சொன்னபேச்சாலுருவிலிபகைத்தானென்பேர்
பேடுவான்புட்பபாணம்புறப்படமாட்டேனூவா
சேடநீதிரிகூடத்திற்சிங்கியைத்தேடுவாயே.

நூவன்சொல்-விருத்தம்.

அங்கணர்திரிகூடத்திலவளைநீயணைந்தாலென்ன
நுங்களிற்பிரிந்தாலென்னநூவனுக்குண்டோநட்டங்
கங்கணமெனக்கேன்சிங்காகாசிலையுனக்குண்டானாற்
கொங்கணச்சிங்கிதன்னைக்கூட்டிவாகாட்டுவேனே.

தலங்கள்தேடிப்போன

விருத்தம்.

திருவண்ணாமலைகாஞ்சிதிருக்காளத்திசிர்காழி சிதம்பரந்தென்னா ரூர்காசி குருநாடுகேதாரங்கோலகொண்டைகோகரணஞ்செகநாதங் கும்பகோணம் அரியலூசிரகத்திருவானைக்காவடங்கலும்போய்ச்சிங் கிதனைத்தேடிச்சிங்கன் வருசிராப்பள்ளிவிட்டுமதுரைதேடிமதிகொ ண்டான்திரிகூடமெதிர்கொண்டானே.

வில்லிபுத்தூர்கருவைநல்லூர்புன்னைக்காவு வேள்திருச்செந்தூர்குரு கூர்ஸ்ரீவைகுந்த நெல்வேலிசிங்கிகுளந்தேவநல்லூர் சீவலைதருசிற்றூர்

குமரிதிருவாங்கோடு-சொல்லரிய குருகூரைகளக்காடுதேடித் தொன்மருத் தூர்த்தாமநல்லூர்தேடிச்-செல்வருமறை சிவசைலம்பாவநாசந் திரிகூடச்சி ங்கிதனைததேடுவானே.

சிங்கன்-சொல்லுதல்.

இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்

கண்ணிகள்.

௧.பேடைக்குயிலுக்குக் கண்ணியைவைத்துநான் மாடப்புறா வுக்குப்போ னேன்-மாடப்புறாவுங்குயிலும்பதுங்கிதன்வேடிக்கைச்சிங்கியைக்காணே ன்,

௨.கோலமயிலுக்குக்கண்ணியைவைத்துநானுலாப்படுக்கவேபோனேன்,ஆ லாவுங்கோலமயிலும் படுத்தேன்மாலான சிங்கியைக்காணேன்.

௩.வவ்வாற்பறவையின்வேட்டைக்குப்போய்க்காம வெவ்வேட்டைதப்பிவி ட்டேன்-வவ்வால்படுக்க மருகாயகப்பட்டவைபோகமாச்சுதுதானே.

௪,இவ்வாறுவந்தவென்னெஞ்சில்விகாரத்தையெவ்வாறு தீர்த்துக்கொள்வே னே-செவ்வாய்க்கரும்பையநுராகவஞ்சியைசிங்கியைக்காணுகிலேனே

குற்றாலத்தில்-சிங்கன்-சிங்கியைத்தேடுதல்.

விருத்தம்.

நற்றாலந்தன்னிலுள்ளோர் யாவரேனுநன்னகரத்தலத்தில் வந்துபெ றுவார்பேறுபெற்றார்தானன்னகரதலத்தைவிட்டாற்பிரமலோகம்வாய்க்கு ம்பேறுண்டாமோ,வற்றாதவடவருவிச்சாரலீங்கில்வடகாசி குமரிமட்டுமேவந் தசிங்கன்,குற்றாலத்தலத்தின்முன்னேதவத்தால் வந்துகூடினான் சிங்கிதனை த்தேடினானே.

சிங்கியைக்காணமற்புலம்பல்.

தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

சிங்கியைக்காணேன்-என்னங்கணைச்-சிங்கியைக்காணேனே,

அநுபல்லவி,

சிங்சியைக்காமப்பாசுங்கிளிப்பேடையைச்
சீர்வளர்குற்றாலர்பேர்வளம்பாடிய
சங்கீதவாரியையிங்கிதநாரியைச்
சல்லாபக்காரியையுல்லாசமோகன (சிங்கியை)

சரணங்கள்.

௧ - ஆரத்தநத்தைப்படக்கொண்டுமூடியசைக்குமின் றாளதையானைக்கோ ம்பென்றே-கோரத்தைவைத்தபிறிக்கெதிர் சென்றேன் கொஞ்சத்கவத் தையறிந்துசுகக்காறி-பாரத்தனத்தைத் திறந்துவிட்டாள் கண்டுபோவியேனு

யிமறந்துவிட்டேனுடன்- நீரக்கனியமயக்கி முயக்கியே சிங்காரமோகனைச் சிங்கிகொண்டாளந்த, (சிங்கி)

௨,பூவென்றபாதம்வருடி வருடிப்புளகமுலையைநெருடி நெருடியேவென்றகண்ணாலுங்கோரஞ்சனந்திட்டியெடுத்துச்சுருளையிதழா லிடுக்குவள்வாவென்றழைகச்சுருள காளெனவனாலுமத்தக்குறிகண்டுநகக்குறிவைத்தபின்னாவென் றெருக்காலுவாப்பள நாக்கிடந்துகொதிக்கு தென்பேய்மனம்

௩,தாராகிங்குமிவடத்தையொதுக்கித்தடமார்பிறுகத் தழுவவந் [(சிங்கி
தாலவள்-வாராடுங்கொங்கைக்குச்சந்தனம் பூசாள்மறுத்து நான்பூசினும் பூசலாகாதென்பள்-சிரசடிக் கூடிவிளையாடியிப்படி நீராமசல்தந்த தீராண்மைக்காரியைக்- காராகண்டர்தென்னாட்டுறை காரிகைப்பூவையை யாரியப்பாவையைச். (சிங்கி

நாவன்-வினவுதல்.

கொச்சகக்கலிப்பா

சங்கமெல்லாமுத்திறுஞ்சக்கர்திரிகூடவெற்பி
பொங்கமெல்லாஞ்செய்யுமுங்கள்பொங்கமெல்லாம்யாரறிவார்
சிங்கமெல்லாமொத்ததுடிச்சிங்காவுன்சிங்கிதனைத்
கங்கமெல்லாஞ்சொல்லியடையாளஞ்சொல்லாயே,

தரு-இ-ம்-பியாகடை-மிசுரதாளம்.

பல்லவி.

கறுப்பிலழகியடா-காமச்

அநுபல்லவி.

சுறுக்கிலழகிசிங்கிசுகக்காறி. (கறுப்பி)

சரணங்கள்.

௧. கண்களிரண்டுமம்புக்களைபோலநீண்டிருக்கும்
கையத்தனையகலங்காணுமடா
பெண்கள்மயக்குமவள்விரகப்பார்வை
சிக்கிபிடித்தாமல்தப்பயலும்பெலப்பானோ (கறுப்பி

௨,நகையுமுகமுமவள்நாளையக்கைவீச்சும்
பகைவரும்பிரிந்தபார்ப்பாரடா
தொகையாச்செரங்வேனிலிச்சொல்லக்கூடாதொரு
வகையாய்வருகுதென்னைமயக்குதையேஐயே (கறுப்பி)

௩,விடையில்வரும்பவனியுடையர்திருக்குற்றாலர்
சடையிலிளம்பிறைபோல்தனிநுதலாள்
சடையிலழகுமிருதடையிலழகுமவ
ளுடையிலழகுமென்னையுருக்குதையேஐயே (கறுப்பி

கொச்சககலிப்பா.

சாட்டிநிற்குமண்டமெல்லாஞ்சாட்டியில்லாப்பம்பரம்போ
லாட்டுவிக்குங்குற்றாலத்தண்ணலார்நன்னாட்டில்
காட்டுவிக்குமுன்மோகக்கண்மாய்ச்சிங்கிதனைக்
கூட்டிவைக்கும்பேர்களுக்குக்கூலியென்னசொல்வாயே

இராகம்-தர்பார்-ரூபகதாளம்

கண்ணிகள்,

க-வாடைமருந்துப்பொடியும் அம்பிபூர
மரப்பாவைபின்தொடரமாயப்பொடியும்
உ-கூடியிருக்கமருந்தும் இருபொழுதும்
கூடியிருப்பார்சளைக்கலைக்கமருந்தும்
ங-காடுகட்டக்கிளிக்கட்டு குறளிவித்தை
கண்கட்டுவித்தைகளுங்காட்டித்தருவேன்
ச-வேடிக்கைக்காமரநிபோல் திரிகூட
வெற்பிலுறைசிங்கிதனைக்காட்டாயையே
ரு-மலையைக்கரையப்பண்ணுவேன் குமரிகட்கு
வாராதமுலைகளும்வரப்பண்ணுவேன்
சு-முலையையொளிக்கப்பண்ணுவேன் ஒளித்தபேனா
மோகினிமந்திரஞ்சொல்லிவரப்பண்ணுவேன்
எ-திலதசீரகஞ்செய்வேன் ஒருவருக்குந்
தெரியாமற்போகவரச்சித்துமறிவேன்
அ-கலகமதனைப்பயலே யென்மீதிற்கண்
காட்டிவிட்டசிங்கிதனைக்காட்டாயையே

நூவன்-சொல்லுதல்.

கொச்சகக்கலிப்பா.

ஆற்றைநாங்கடத்திவிட்டாலாகாசமார்க்கமோடத்
தேற்றநீயறியாயல்லோதிரிகூடமலையிற்சிங்கா
சாற்றுமுன்மருந்துபோலச்சகலர்க்குஞ்குறிகள்சொல்லிப்
போற்றுமுன்சிங்கிபோன புறத்தெருவிறுகண்டாயே

சிங்கன்-சிங்கியைக்காணுமல்-வருந்துதல்

தரு-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி,

எங்கேதான்போனாளையே-என்சிங்கிப்பேடு
எங்கேதான்போனாளையே

அநுபல்லவி.

க- செங்காளர்திரிகூடர்கர்த்தர்திருநாடுதனில் (எங்கே

## சிங்கன் சிங்கியைக்கண்டு மகிழ்தல்

### கொச்சகக்கலிப்பா

தெண்டாடுஞ்சுந்தரற்குத் தோழர்திரிகூடவெற்பிற்
றிண்டாடிநின்றசிங்கன் சீராடுஞ்சிங்கிதனைக்
கண்டாடித்துள்ளாடிக் கள்ளாடுந்தும்பியைப்போற்
கொண்டாடிக்கொண்டாடிக் கூத்தாடிக்கொண்டானே

### சிங்கனுக்கும் சிங்கிக்கும் சமவாதம்

### இராகம்-தன்யாசி-ஆதிதாளம்

### கண்ணிகள்

(சிங்கன்) இத்தனைநாளாகவென்னுடன்சொல்லாமல்
எங்கேநடந்தாயடிசிங்கி — எங்கே

(சிங்கி) கொத்தார்குழலார்க்குவிஸ்தாரமாக
குறிசொல்லப்போனேன்டாசிங்கா — குறிசொல்

(சிங்கன்) பார்க்கிலதிசயந்தோணுதுசொல்லப்
பயமாயிருக்குதடிசிங்கி — பயமா

(சிங்கி) ஆர்க்குப்பயமினித்தோணினகாரியம்
அஞ்சாமற்சொல்லடாசிங்கா — அஞ்சா

(சிங்கன்) காலுக்குமேலேபெரியவிரியன்
கடித்துக்கிடப்பானேன்சிங்கி — கடித்து

(சிங்கி) சேலத்துநாட்டிற்குறிசொல்லிப்பெற்ற
சிலம்புகிடக்குதடாசிங்கா — சிலம்பு

(சிங்கன்) சேலத்தாரிட்டசிலம்பிற்குமேலே
திருகுமுருக்கேதடிசிங்கி — திருகுமு

(சிங்கி) கோலத்துநாட்டார்முறுக்கிட்டதண்டை
கொடுத்தவரிசையடாசிங்கா — கொடுத்த

(சிங்கன்) நீண்டுக்குறுகியும்நாங்கூழ்ப்போல
நெளிந்ததெளிவென்னடிசிங்கி — நெளிந்

(சிங்கி) பாண்டியனார்மகள்வேண்டுங்குறிக்காகப்
பாடகமிட்டதடாசிங்கா — பாடக

(சிங்கன்) மாண்டத்தவளையுன்காலிலேகட்டிய
மார்க்கமதேதடிசிங்கி — மார்க்கம

(சிங்கி) ஆண்டவர்குற்றாலர்சந்நிதிப்பெண்க
ளணிமணிக்கெச்சமடாசிங்கா — அணிமணி

(சிங்கன்) சுண்டுவிரல்தோறுங்குண்டலப்பூச்சி
சுருண்டுகிடப்பானேன்சிங்கி — சுருண்டு

சிங்கன் முலைமேல்சொல்வதைமூடிகிடப்பானேன் சிங்கி
சிங்கி செஞ்சி விலைமாதர்தந்ததுவேடிக்கைக்கச்சடா சிங்கா
சிங்கன் மூடிக்கிடப்பதுமேற்றங்குலைப்பானேன் சிங்கி
சிங்கி இது-ஆடித்திருக்கங்கால்வாரடைப்பொடியடா சிங்கா
சிங்கன் அந்தப்பொடியால்முலைவீக்கம்போமோ சிங்கி
சிங்கி வீக்கம்-ஆறுவனுக்கென்னபோறவனுக்கென்ன சிங்கா
சிங்கன் இந்தப்பணியைநீபூணப்பொறுக்குமோ சிங்கி
சிங்கி புலி-ஈசர்க்குங்கற்றோர்க்குமெல்லாம்பொறுக்குங்காண் சிங்கா
சிங்கன் குல்லத்தைப்பார்த்தால்கொடியிடைதாங்குமோ சிங்கி
சிங்கி நல்-கொடிக்குச்சுராக்காய்கனத்துக்கிடக்குமோ சிங்கா
சிங்கன் இல்லாதசித்தெல்லாமெங்கேபடித்தாடி சிங்கி
சிங்கி நாட்டில் நல்லாரைக்கண்டாருக்கெல்லாம்வருமடா சிங்கா
சிங்கன் பெட்டகப்பாம்பைபிடித்தாட்டவேண்டாமோ சிங்கி
சிங்கி இந்த-வெட்டவெளியிலேகோடிப்பாம்பாடுமோ சிங்கா
சிங்கன் கட்டிக்கொண்டேசற்றேமுத்தங்கொடுக்கவோ சிங்கி
சிங்கி நடுப்-பட்டப்பகலில்நானொட்டுக்கொடுப்பேனோ சிங்கா
சிங்கன் முட்டப்படாமுலையானையைமுட்டவோ சிங்கி
சிங்கி காமம்-மட்டுப்படாவிட்டால்மண்ணோடேமுட்டடா சிங்கா
சிங்கன் சேலையுடைதன்னைச்சற்றேநெகிழ்க்கவோ சிங்கி
சிங்கி சும்மா-நாலுபேர்முன்னென்னைநாணங்கெடுக்காதே சிங்கா
சிங்கன் பாதம்வருடித்துடைகுத்தம்வேண்டாமோ சிங்கி
சிங்கி மனம்-போதமவருடிப்போய்ப்பூனையைக்குத்தடா சிங்கா
சிங்கன் நாக்குத்துடிக்குதுநல்வாயிதழுக்கு சிங்கி
சிங்கி உன்றன்-வாய்க்குளிருப்பதுமாலைக்கள்ளல்லவோ சிங்கா
சிங்கன் ஒக்கப்படுக்கவோஒதுக்கிடம்பார்க்கவோ சிங்கி
சிங்கி பருங்கொக்குப்படுக்கக்குறியிடம்பாரடா சிங்கா
சிங்கன் விந்தைக்காரியுன்னைவெல்லக்கூடாதடி சிங்கி
சிங்கி அது-சந்தேகமோவுன்தலைபம்பனைக்கேளடா சிங்கா
சிங்கன் தென்றெல்லாமுன்னைத்தேடித்திரிந்தேனே சிங்கி
சிங்கி அப்பாலிந்நாட்டில்வந்தென்னையெப்படிநீகண்டாய் சிங்கா
சிங்கன் நன்னகர்குற்றாலநாதனைவேண்டினேன் சிங்கி
சிங்கி மணிப்-பன்னகம்பூண்டானைப்பாடிக்கொண்டாடுவோம் சிங்கா
சிங்கன் பாடிக்கொள்வாரெவராடிக்கொள்வாரெவர் சிங்கி
சிங்கி நீதான் பாடிக்கொண்டாற்போதுமாடிக்கொள்வேனடா சிங்கா



நேரிசைவெண்பா,

சுற்றுதலூர்கோருஞ் சுத்தவேண்டாம்புலியர்
குற்றாலமெய்ஞ்ஞானருக்காற்கூறினான்- வற்று
வடவருவியானேமறுபிறவிச்சேற்றி
னடவருருயானேநமை

வாழ்த்து

கண்ணிகள்

௧, கொற்றமதிச்சடையானைக்குறும்பலாவுடையானை
வெற்றிமழுப்படையானைவிடையையவாழ்த்துகிறேன்

௨, தாதையில்லாத்திருமகனைத்தடமலைக்குமருமகனை
வேதசங்கவிதியானைவேதியனைவாழ்த்துகிறேன்

௩. தந்திமுகற்கொருகோனைத்தமிழிலஞ்சிமுருகோனை
மைந்தனெனுமிறையோனைமறையோனைவாழ்த்துகிறேன்

௪, திமுகத்திற்பழிகொடுத்ததிருமுடிக்காயொருமுடியை
மாமனுக்குவரிசையிட்டமகனைவாழ்த்துகிறேன்

௫, காமனுக்கும்பூமனுக்குங்கன்னிதெய்வயானைக்கும்
மாமனெனவேபகரும்வள்ளலனைவாழ்த்துகிறேன்

௬, நீடுலகெலாமளந்தநெடியமாலும்மயனும்
தேடரியதிரிகூடற்செல்வனையான்வாழ்த்துகிறேண்

௭, சித்ரநதியிடத்தானைத்தேனருவிக்கடத்தானைச்
சித்ரசபைநடத்தானைத்திடத்தானைவாழ்த்துகிறேன்

௮ காலவயிரவனைக்காவில்வளர்த்தவனை
மேலைவாசப்பவனைமென்மேலும்வாழ்த்துகிறேன்

௯, கருநலகமெய்த்தம்புகழ்கன்னிமார்பெண்களையும்
வரிசைதுனைத்தளவாயமாமனையும்வாழ்த்துகிறேன்

௰, பனகமணிபூண்டவனைப்பக்தர்களையாண்டவனை
அனவரதத்தாண்டவனை யாண்டவனைவாழ்த்துகிறேன்

இதுவுமதுவிருத்தம்

வார்வாழுங்கனதகுழல்வாய்மொழியம்பிகைவாழிவதுவைப்பூட்டுந்
தார்வாழிதிரிகூடத்தார்வாழிகுறுமுனிவன்றலைநாட்சொன்ன
பேர்வாழியரசர்கள்செங்கோல்வாழிநன்னகரப்போரலோக்கும்
ஊர்வாழிகுற்றாலத்தவத்தடியார்வாழிநீடூழிதானே.

திருக்குற்றாலக் குறவஞ்சி

முற்றிற்று.

